# ஆத்ம சொரூப ஞானம்

பெ. மாணிக்கசாமி முதலியார் அவர்கள்

எழுதியது



1940



[விலை அணா 2

20-5

இப்புத்தகம்

சாது - வே. பாலகிருஷ்ண முதலியார் அவர்களது

(மஹா சமாதியடைந்த)

# 29-ம் ஆண்டு குருபூஜை தினம்

## (24-11-40)

முமுட்சுகளுக்கு வினியோகிக்கப்பட்டது

20-5

## பாயிரம்

[இந்நூலாசிரியர் [illegible] நண்பர் பாடியது]

தொண்டர் நாடெனும் தொண்டைமண் டலத்தில்
பெருபெய ரதுவே பெறும்பெய ராக
இருந்த ஊரின் பெருமை சிறக்க
துளுவவே ளாளத் தூய வழியினில்
வணிக வாழ்வினைப் பணியென ஆற்றி
இல்லறத் துறைவே நல்லற வாழ்வென
அகிலாண் டம்மையை மகிழ்வுடன் மணந்து
சென்னிப் பதியாம் சென்னையம் பதியில்
மாணிக்க சாமி மணியினைப் பெற்று
வேதாந் தத்து வேட்கை யடைந்து
திருவேங் கடரைக் குருவெனக் கண்டு
திருமா லடியராய் பரத்து வாச
இருடியர் கோத்திரம் ஈண்டை இலங்க
காளிங்க ராயர் வாழ்ந்தனர் நன்று.
வீர சிவாஜியை வீரன் ஆக்கிய
அன்னை ஜீஜா தன்னை நிகர்த்து
இராமன் கிருட்டினன் அரிச்சந் திரன்முதல்
புராதன வீரர்தம் புண்ணியக் கதைகள்
வாழ்க்கை யழகுற வழிகாட் டுவவெனப்
பணித்த கண்ணொடு கனிவுறச் சொல்லிப்

பல்வழி யானும் நல்வழிப் படுத்துத்
தூய வாழ்க்கையைச் சேய்கள் நடத்தப்
பெற்றவப் பொழுதினும் பெரிது மூவந்தனள்
மாணிக்கம் ஈன்ற மணிவயிற் றன்னை.
இருபெருங் குரவர்க் கரியவோர் மகவாய்
ஆயிரத் தொண்ணூற் றறுபத் தொன்பதில்
பிறந்த மாணிக்கம் பி. ஏ. படித்துக்
கணக்குச் சோதனைக் காரியா லயத்தில்
தணிக்கை செய்துபின் தணிகை பெற்றுளார்.
இராமன் கிருஷ்ணன் இருவரும் சேர்ந்த
ஒருபெரும் பிறவியே இராம கிருஷ்ணர்
என்று மகிழ்ந்தப் பேர்தனில் முகிழ்த்த
இராம கிருஷ்ண னந்தப் பெரியார்
திருவடி யிருந்து குருநூ லறிந்து
தத்துவங் கடந்த தத்தாத் திரய
குருபரம் பரையில் வருபெரி யோரிடம்
உபதே சம்பெறும் உத்தம ராய
சீலம் மிகுந்த பால கிருஷ்ணப்
பெரியோர் தம்மைக் குருவெனக் கொண்டனர்.
ஏம முறவே ராம கிருஷ்ண
மடாலய முனிவர் நடாத்தும் பணிகளில்
பங்குகொண் டுள்ளார் பல்லாண் டுகளாய்.
இந்து மதத்தில் வந்துதி மாதரில்

20-5

வீர நங்கையர் வரலா றென்றும்
பாரி ஜாதப்பேர் பக்திக் கதையும்
குருபக்தி விளக்க ஒருசிறு கதையும்
தமிழிற் றாமே செய்துளார் நன்கு
வேதாந் தமுமதன் கோட்பா டுகளும்
தனக்குத் தானே துணையெனு நூலும்
வேதாந்த சிங்கம் விவேகா நந்தர்
இந்தியர் தமக்குத் தந்தநற் செய்தியும்
ஜகஜீவ பரத்தை விளக்குவினு விடையும்
தழுவியே தமிழில் மொழிபெயர்த் துள்ளார்.
உண்மை உணர்ந்த உரவோ ராகலின்
இல்லுறை தேவி இல்லா ராகவும்
அல்ல லுறுமல் ஆறி யிருந்து
நில்லா உலகின் நிலையினைக் கண்டு
தூய நல்ல துறவு வாழ்க்கையைத்
துணியளா வின்றித் துணிந்துகொண் டுள்ளார்.
நல்ல பிறவியும் நல்ல வாழ்க்கையும்
நல்ல சேர்க்கையும் நல்ல பணிகளும்
வாய்த்து வாழுமிக் கிழவரின் வார்த்தை
வாழ விரும்பும் வாலிபர் யார்க்கும்
வாழ்வுதரு நூலாம் வாழ்க வாழ்கவே.

---

# சிறப்புப் பாயிரம்

ஆத்ம சொரூப ஞானத்தைப்பற்றி நமது நாட்டில் அனேகவித அபிப்பிராயங்கள் உலவி வருகின்றன. அவைகளைத் துவைதம், அத்துவிதம், விசிஷ்டாத்வைதம் என்னும் பிரிவுகள் ஒன்றனுள் அடக்கலாம். "இருப்பது ஒன்றே; அதனை மேலோர் பல பெயரிட்டழைக்கின்றனர்" என்பது சுருதி வாக்கியம். அப்பொருளின் தன்மையையும், ஆன்மா உலகம் ஆகிய இவைகளின் தன்மையையும், இவைகள் மூன்றுக்கும் உள்ள சம்பந்தத்தையும் விளக்கும் விதத்தில்தான் அபிப்பிராய பேதங்கள் காணப்படுகின்றன. மோக்ஷமென்பதே எல்லா முமுக்ஷுக்களின் இலக்ஷியமாயிருக்கினும், அவரவர்கள் மனப்பான்மைக்கேற்ப மேற்கூறிய சித்தாந்தங்களில் ஒன்றைக் கைப்பற்றுகினர். நெடுநாளாக இவ்வுலகில் போதிக்கப்பட்டு வரும் பல்வேறு அபிப்பிராயங்களே இவ்வேறுபாடான மனப்பான்மைக்கு மூலகாரணமாகும். இவ்வபிப்பிராய பேதங்களால், மானிடருக்கு விளைந்ததும் விளையக்கூடியதுமான துவேஷமும், துன்பங்களும் அளவிடக்கூடியவையல்ல. இவ்வாறு வருந்தும் உலகின் விஷயமாக ஸ்ரீமத் விவேகானந்த சுவாமிகள் பின்வருமாறு கூறியிருக்கிறார் :—

"பிரபஞ்சத்தின் ஏகத்வத்தையும், எல்லையற்ற பரம்பொருளே நாமென்பதையும் சுவானுபவத்தில் உணர்ந்ததாக எண்ணிக்கொள்ளுவோம். இருப்பது ஒரு பரம்பொருளே என்பதையும், அப்பொருளே நானாரூபமுள்ள பிரபஞ்சத் தோற்றங்களாகக் காணப்படுகின்றது என்பதையும், நாம் நமது சுவானு

பவத்தில் உணர்ந்ததாகவும் எண்ணிக்கொள்ளுவோம். அவ்வித அனுபவத்தின் பலனாக நமது நிலை எத்தன்மைத்தாகும் ?...இவ் வித அனுபவம் எய்திய பின்னர், இருப்பது ஒன்றே என்பதை சாக்ஷாத்கரித்த பின்னர், அன்பு என்னும் நீரூற்றுகள் வறண்டு மாய்ந்துவிடுமென்றும், வாழ்க்கையில் அனுபவிக்கும் யாவும் நம்மை விட்டு அகன்றுவிடுமென்றும், எவை எவை சுகம் கொடுத்துக்கொண்டு வந்தனவோ அவை யாவும் இம்மையில் மாத்திரமன்றி மறுமையிலும் நமக்குக் கிடைக்காமல் போய் விடுமென்றும் ஜனங்கள் கருதிப் பயமடைகின்றனர். தம்மை ஒரு பொருளாகச் சிறிதும் கருதாதவர்களே உலகத்துக்குப் பெருத்த உபகாரிகளா யிருந்தனர் என்பதை ஜனங்கள் ஒரு போதும் யோசித்துப் பார்ப்பதில்லை. எப்பொழுது ஒருவன் தனது அன்பிற்கு நிலைக்களமாகும் பொருள் மிகத் தாழ்ந்த அற்ப அழியுந் தன்மையுள்ள பொருளல்ல, பின்னர் அது பரம் பொருளே என்பதைக் காண்கிறானோ, அப்போதுதான் அவன் அன்பு செய்பவனாகிறான். எந்த மனிதன், தனது பகைவன் ஒவ்வொருவனும் அப்பரம்பொருளே யன்றி வேறல்லன் என் பதை, அறியுந் தரமுள்ளனோ அவனேதான் தனது மிகப் பெரும்பகைவனிடமும் அன்பு கொள்ளுவான்...முற்கூறிய பேருண்மையில் ஒரு சிறிதை இக்காலத்திய மக்களனைவரும் உணர்வார்களானால் இவ்வுலகில் இப்பொழுது ஒருவர்மீது ஒரு வர் உரசிக்கொண்டும், ஒருவரை ஒருவர் முட்டிக் கொண்டும் அல்லல் நிறைந்த வாழ்க்கை நடைபெறுவதற்குப் பதிலாக

உலக வாழ்க்கையின் பான்மையே மாறுதலடையும். சண்டை சச்சரவுகட்குப் பதிலாக அமைதியே அரசாட்சி செய்யும்... உலகத்தில் இன்றைக்கு வாழும் ஆண்பெண்களில் 10 இலக்ஷத்தில் ஒருவர் மட்டும், ஓரிடத்தில் அமர்ந்து, சில நிமிடநேரம் "நீங்கள் யாவரும் கடவுளே, ஓ! மனிதர்களே! ஓ! மிருகங்களே! ஏனைய ஜீவராசிகளே! நீங்கள் யாவரும் ஒரே பரம்பொருளின் தோற்றங்களே" என்று மாத்திரம் சிந்தனையோடு சொல்லுவார்களாயின், உலக முற்றும் ஒரு மணிக்குள் வேறு மாதிரியாய் விடும்......இக்கருத்துகள் உலக முழுவதும் பரவுதற்குக் காலம் நெருங்கி வருகிறது. இக்கருத்துகள் சத்புருஷர்களுக்கே மட்டு மல்ல, பாபிகளுக்கும் உரிமையாகிவிடும். ஆண் மக்களுக்கும், ஸ்திரீகளுக்கும், குழந்தைகளுக்கும் பொது உடைமையாகி விடும். கல்விமான்களும் பாமரர்களும் கையாளுதற் குரியவைகளாய் விடும். அக்காலத்தில், உலகத்தைச் சூழும் வாயுமண்டல முழுதும் இக்கருத்துகள் பரவியிருக்கும். நாம் காற்றைச் சுவாசிக்கும்போது மூச்சு அசையுந்தோறும் "நீதான் அது" என்ற தொனி கிளம்பும். கணக்கற்ற சூரியர் சந்திரர்களோடு கூடிய இப்பிரபஞ்ச முழுதும், அறிவிக்கக்கூடிய பொருள்கள் ஒவ்வொன்றின் மூலமாகவும் "நீ அதுவே" என்று ஏகோபித்துக் கோஷிக்கும்."

மேலும் நிரீசுரவாதிகளாலும் போற்றப்படும் நன்னெறி நற்செய்கை ஆகிய இவை, ஏகான்ம நிச்சயத்தையே இன்றியமையா ஆதரவாகக் கொண்டுள்ளன என்றும் ஸ்ரீமத்

விவேகானந்த சுவாமிகள் பறைசாற்றி இருக்கின்றார். இதனை மேல்நாட்டு மேதாவிகளும் அங்கீகரித்துள்ளார். ஒருவனது இலக்ஷியம் எவ்வளவுக்கு எவ்வளவு மேலானதாகவும் தூயதாகவும் உள்ளதோ, அவ்வளவுக் கவ்வளவு அவன், தான் சுகப்பேற்றை யடைவதன்றிப் பிறரையும் அவ்வழியில் நடத்தக் கூடிய ஆற்றலும் ஆர்வமும் உடையவனாகிறான். குறிக்கோள்கள் என்னும் பல படிகள் அமைக்கப்பட்டுள்ள ஆத்மவித்தை என்னும் ஏணியின் சிகரத்தில் விளங்கும் ஒப்புயர்வில்லாததான இலக்ஷியம் ஏகான்மநிச்சயமாதலின், அதனை ஒருவன் தொடக்கத்திலேயே கைப்பற்றின், பின்பு மாற்றவேண்டிய அவசியம் என்றும் எழாது. ஆதலின் அத்தகைய பொருளின் நிச்சயமும் அதனை சுவானுபவத்தில் ஓர்ந்துணர்வதற்காய ஆர்வமும் இச்சிறு நூலை வாசிப்போர் அனைவருக்கும் [illegible]யாகுமேயானால், ஸ்ரீ இராமகிருஷ்ண விஜயம் என்னும் பத்திரிகையில் யான் முன்பு பிரசுரித்த மூன்று கட்டுரைகளையும் இப்போது புத்தக ரூபமாக அச்சிட்டு வெளியிட்டதன் கருத்து இறைவன் அருளால் நிறைவேறியதாகும்.

இந்நூலை வாசித்துச் சொற்பிழை அச்சுப் பிழைகளைத் திருத்தியும், கருத்துக்களைத் தெளிவுபெற விளங்குமாறு ஆங்காங்குத் திருத்தங்கள் செய்தும் எனக்கு உதவிபுரிந்த ஸ்ரீமான் அ. ஸ்ரீனிவாஸாசாரியார், B. A., L. T. அவர்களுக்கு எனது வந்தனம் அளிக்கிறேன்.

பெ. மாணிக்கசாமி.

# சாற்றுகவி

பரசமய கோளரியாரும்,
மண்டலேசுவரரும்,
உபய பாஷா வேதாந்த பிரவர்த்தகாசாரியரும்,
திருப்பூவண மடாதிபதியும்,
கோவிலூர் மடம், திருக்களர்,
ஸ்ரீவீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகள் அவர்கள்
மாணாக்கரும் ஆகிய
ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள் அவர்கள்
இயற்றியது

## எழுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

ஆசிலாத் மாவின் சொரூபஞா நத்தை
யாக்கிஞ னியாவரு முணர
தாவில்சீ வனியா ரெனும்விசா ரமதந்
தனதுதன் மையின்விசா ரமதும்
மேவரு ஞாநவஞ் ஞாநரூ பமதும்
விளங்கமூ விசாரம தறைந்தான்
மாசிலா மணியாம் பெயர்தனக் கியைய
மகிழ்சென்னை நகரிலே வசிப்போன்.

# முன்னுரை

## ஆத்ம சொரூபஞானம்

இந்நூலானது ஆசிரியரது சாஸ்திர ஞானத்தையும், சொந்த அநுபவத்தையும், பூஜ்யபாத ஸ்ரீராமகிருஷ்ணாநந்த சுவாமிகளை யுள்ளிட்ட பெரியோர்களது முன்னிலையிலே கேட்டுத் தெளிந்த உண்மைகளையும் ஆதாரமாகக் கொண்டு எழுதப்பட்டது. திட்பநுட்பஞ் சிறந்து உணர்தற்கரிய அரும்பொருள் பலவற்றை இலகுவான தமிழ் நடையிலே தெரிவிப்பது. ஆத்ம ஞான அறிவினைப்பெற முயல்வோர் இதனை உவந்தேற்றுக் கற்பாரென்பதற்கு ஐயமில்லை.

அத்வைதாஸ்ரமம்
மாயாவதி, அல்மோரா
15—10—40

சுவாமி விபுலாநந்தர்,
பிரபுத்தபாரதா பத்திராதிபர்.

# பொருளடக்கம்

# ஆத்ம சொரூப ஞானம்

ஐவகைப் பொருளு நான்கு கரணமுங் குணங்கண் மூன்றுஞ்
செய்வினை யிரண்டு மொன்றி யாவருந் திகைப்ப நின்ற
பொய்யிரு ளகல ஞானப் பொருட்கதிர் விரித்த புத்தேள்
கைவள ராழிச் செங்கட் கண்ணனைக் கருத்துள் வைப்பாம்.

வானவர் வணங்கும் வேங்கட முளனாய்
வையகந் தொழுதுயு மரியாய்
வண்மைசே ரரனு மயனுமா யனையோர்
வாட்டமில் தேவி யாராகிக்
கானுறு மநந்தன் கருடனே சேனை
முதலியே களங்கமில் தும்பிக்
கையுறு முகத்தோ னறுமுகன் கதிரோன்
காரிமாறன் முதலோராய்த்
தேனுறு மலங்கற் பாஷிய காரராய்த்
தீதிலா வரவர முனியாய்த்
திவ்ய தேசிகனும் பாலகிருஷ்ண னாகித்
திகைப்பில் ராமாநுஜன் முனாய்த்
தீனருக் கருள்செய் பார்த்தசா ரதியாய்த்
'தேன்பொழி யலருறை மகளாய்த்
திசையெல்லாம் பரவு ஞானபூரணனாய்த்
திகழுறு மிராமனைப் பணிவாம்.

சத்திய ஞானநந்த சொரூபம் போற்றி
சகலபரி பூரணமாஞ் சொரூபம் போற்றி
நித்திய ஞானனந்த சொரூபம் போற்றி
நிரஞ்சனநிர்க் குணமான சொரூபம் போற்றி
யித்துவித லேசமிலாச் சொரூபம் போற்றி
யேகசிதா காயபர சொரூபம் போற்றி
யத்துவித மானபர சொரூபம் போற்றி
யகண்டமதாம் பரசொரூபம் போற்றி போற்றி.

மாசிலா மணியே மரகதமே, யடியர் குழாத்தி லிருப்பவனே
தேடு மவருக்குத் திண்ணியனே, வாடுமவருக்கு வருந்தேனே
வந்துஎளியேனையாளாயோ,ஆண்டிருவினையைப் போக்காயோ
பட்டதுன்பம் போதாதோ, பிறவித்துன்பம் தீராயோ
என்னை எனக்கே அளியாயோ, எங்கு நிறைந்தபர வெளியே.

—

# ஆத்ம சொரூப ஞானம்

## முதல் அத்தியாயம்

## ஜீவன் யார்?

ஒரு மீனை அதனது சுபாவ இடமாகிய நீரினின்று பிரித்துத் தரைமேற் கிடத்தினல், அது துள்ளித் துடித்து மீண்டும் நீரை எய்த முயல்வதைக் காண் கிறேம். தரை அதன் சுபாவ ஸ்தலமாக இருக்கு மாயின், அது அங்கு ஓடிக் களிப்புடன் சஞ்சரித்தல் வேண்டுமன்றே? ஆகவே, அது தரையில் வைக்கப் பட்டபின்னர் அது பட்டபாடெல்லாம் தனது நிஜசுபாவ நிலையை எய்துவதற்கே யென்பது விளங்குகின்றது. இவ்வுதாரணத்தைக்கொண்டு சலனம் யாவும் நிஜ சுபா வத்தைப் பொருந்துவதற்குச் செய்யப்படும் போராட் டம் என்னும் ஒரு பொதுவிதி பெறப்படுகின்றது. எவ்வெப்பொருள் சலிக்கின்றதோ, அவ்வப்பொருள் இழந்துள்ள அதனது சுபாவ நிலையைத் திரும்பப் பெறச் செய்யும் பிரயத்தனமே அசைவு ரூபமாகத் தோன்றுகின்றது என்பதை ஓர்ந்து உணருதல் வேண்டும்.

இவ்வுலகம் சலன ரூபம் என்பது தத்துவ சாஸ் திரிகளும், பௌதிக சாஸ்திரிகளும் மறுக்கொணுத

விஷயம். இந்தச் சலனம் எதனுடையது? எந்த நிலையை இழந்திருப்பதற்காக இந்தச் சலனம் ஜனித்துள்ளது? இக்கேள்விகளுக்குச் சமாதானமளிக்க முயலுவாம். சேதனப் பொருளே சலிக்கும் தன்மையது; ஏனெனில் அசேதனப் பொருள்கள் சடமாதலின் தாமாகவே ஒரு கிரியையும் புரியச் சக்தி யற்றன. அசேதனப் பொருள்களும், அவைகளிடம் தோன்றும் சலனமும், சேதனப் பொருள்களின் சலனத்தின் ஸ்தூல ரூபமாக இருத்தல் வேண்டும்; அங்ஙன மன்றாயின், சடத்துக்குச் சித் இலக்கணம் கூறுதல் வேண்டும். இது கூடாது. மேலும் சடப் பொருள்கள் யாவும் சித்தை ஆசிரயமாக உடையன. சடப் பொருள்கள் அறியப்படுபவைகளே யன்றி அறியுஞ் சக்தியை யுடையன வல்ல. கூர்ந்து நோக்கில், அறியப்படும் பொருள்கள் அறிவின் ஆதீனமா யுள்ளன என்பது புலப்படும்.

அன்ன மய, பிராண மய, மனோ மய, விஞ்ஞான மய, ஆனந்த மய கோசங்களில் விவகரிப்பவன் எவனோ, ஸ்தூல, சூக்கும, காரண தேகங்களில் பொருந்தி யுள்ளவன் எவனோ, சாக்கிர, சொப்பன, சுழுத்தி அவஸ்தைகளை யனுபவிக்கிறவன் எவனோ, அவனே சேதனன் எனப்படுவன்; அவனே ஜீவன், அவனே ஆன்மா எனவும் கூறப்படுவன். சேதனன், ஜீவன், ஆன்மா ஆகிய இவை பரியாயநாமங்களாக இக் கட்டுரையில் காணப்படுவதைக் கவனித்தல் வேண்டும். இப் பஞ்ச கோசங்

களும், இம் மூன்று தேகங்களும், இம் மூன்று அவஸ்தைகளும் கால தேச பரிச்சேதங்க ளுடையன. இவைகள் ஜீவனுக்கு உபாதிகள் எனப்படும் (ஒரு வஸ்துவைப் பல வஸ்து போன்று தோன்றச் செய்வதற்குக் காரணமாயிருப்பது உபாதி எனப்படும்). இவ்வுபாதிகள் தோன்றி நின்று அழியுந்தன்மையன வாதலின், அவைகளினிடம் விவகரிக்கும் ஜீவன் இவைகளுக்கு வேருய் கால, தேச பரிச்சேத ரகிதனுய் அழி வற்றவனுய்த் திகழ்கின்ருன். உபாதி வேறுபாட்டால் ஜீவன் பலவாகக் காணப்படுகிருனேயன்றி உண்மையில் ஜீவன் ஒருவனே.

"பொன்றுவ துடம்பதனு ணின்ற பொருள் பொன்ருது"

என்றும்,

"ஊறுபட வொன்றினுளே பிறத்தல்பிறந் துளவாதல்
வேறுபட வளர்தல்வளர்ந் தயலொன்ருய் விளைந்தமைதன்
மாறுபடத் தேய்தலற மாய்தலென வருகின்ற
வாறியல்பு முடம்பன்றி யறிவுடையா வாதலினல்"

என்றும் ஸ்ரீ பகவத் கீதையில் கூறியுள்ளது இங்குக் கவனித்தல் வேண்டும். இத் தகைய ஜீவன் உபாதிகளை எப்படி ஏற்கின்ருன் எனின்,

"பீறிய போர்வையைப் பெயர்த்துப் பின்னரே
வேறியல் போர்வையை விரும்பு வாரென

ஆறிய வுடம்பினி லுதித்த வுண்மைதான்
மாறியோ ருடம்பினை மருவு மன்னனே."

என்று கீதாசிரியர் கூறிய வண்ணம் "ஜீரண வஸ்திரத்தை விடுத்து நூதன வஸ்திரத்தைக் கிரகிக்கும் புருஷன் விகாரமற்று ஏகரூபனு யிருப்பதுபோலத் தேகியும் புராதன தேகத்தை விடும்போதும், நூதன தேகத்தை யடையும் போதும் அவிக்கிரியனுகவே யுளன்."

இதன்றியும், ஜீவன் முக்குணங்களை யுடையவனைப் போலக் காண்கிருன். ஒருபோது சாந்தமாகவும், ஒருபோது சுறுசுறுப்பும் பரப்பரப்பும் உடையவனுகவும், ஒருபோது சோம்பலுடையவனுகவுங் காணப்படுகிருன். இக் குணங்க ளில்லா ஜீவனைக் கண்டிலம். இக் குணங்களில் ஒன்று ஜீவனிடத்து மேலாடிக்கொண்டிருக்கும். சத்துவ குணம் மேலாடிக்கொண்டிருப்பவனைச் சாத்விகனெனவும், ரஜோ குணம் மேலாடிக்கொண்டிருப்பவனை ராஜதனெனவும், தாமத குணம் மேலாடிக்கொண்டிருப்பவனைத் தாமத னெனவும் சொல்லுகிருேம். மேலாடிக்கொண்டிருக்குங் குணத்தோடு மற்ற இரண்டு குணங்களும் இல்லாமல் போய்விடவில்லை. இம் முக்குணங்களும் ஜீவனுடைய ஆதீனத்தி லிருத்தலினுலும், அவற்றை அடக்கும் சக்தி யுடையோனு யிருத்தலினுலும், இவன் அவைகளுக்கு வேறு யிருக்கின்ருன் என்பதை அங்கீகரித்தல் வேண்டும். இம் முக்குணங்களுக்கும் ஆசிரயம்

ஜீவனே. அவைகள் அவனுக்கு உபாதிகள். இம் முக் குணங்களுடைய வேறுபாட்டால், ஜீவர்கள் பலவாகக் காணப்படுகிறார்களே யன்றி, உண்மையில் அவர்கள் ஒன்றே.

ஒரு சடவஸ்து மற்றோர் சடவஸ்துவை அறிவதில்லை. ஆனால் ஜீவர்கள் ஒருவரை ஒருவர் அறிகிறார்கள். ஜீவர்கள் பல அல்ல ; ஒன்று என்று ஸ்தாபிக்கப்பட்டது. இஃது உண்மையாயின், ஜீவர்கள் ஒருவரை ஒருவர் அறிகிறார்கள் என்பது எவ்வாறு இயலும்? சடவஸ்துக்கள் பலதிறப்பட்டன. ஒரு சாதாரணக் கல்லும், கண்ணாடியும் சடப்பொருள்களே யாயினும், பிற் கூறியது சூரியனைப் பிரதிபிம்பித்துக் காட்ட, முற் கூறியது அவ்விதம் செய்யச் சக்தி யற்றதாகின்றது. வைடூரியம், கோமேதகம், வைரம் முதலிய விலை யுயர்ந்த கற்கள், சாதாரணக் கற்களைப்போ லல்லாமல், ஒளியைத் தம்முள் ளடக்கிக் காட்டுகின்றன என்பது எல்லாருடைய அனுபவமாகும். இஃதே போன்று, ஜீவனது உபாதிகளும் கல், மரம் முதலிய சடப்பொருள்களைப் போ லல்லாமல், ஜீவனது சித் சக்தியை வகித்துச்சித்துப் போல் விவகரிக்குந் தன்மையன வாகின்றன. ஆதலின், ஒரு ஜீவன் மற்றொரு ஜீவனை அறிகிறான் என்றபோது, சித்குணம் வந் தேறிய ஜீவனது உபாதி, மற்றோர் உபாதியை அறிகின்றது என்று கூறுதலே பொருத்த முள்ளதாகும். "அனலொழுக நின்றிடும் இரும் பனல் கூட

யின்றி அதுவா" யிருப்பது போல் ஜீவனது சித் குணத்தொடு கூடிய அவனது உபாதி கூட லின்றி அவனு யிருப்பது போல் காண்கின்றது. ஆதலின், அறிவது இந்த உபாதியே யன்றி, கால தேச பரிச்சேத ரகித ஜீவனல்ல.

இந்த ஜீவன், தேகியாகிய இந்த ஜீவன், அவஸ்தாத்ரயனுகிய இந்த ஜீவன், முக்குண வயத்தனுகிய இந்த ஜீவன், கால தேச பரிச்சேத ரகித தனது நிஜ ஸ்வபாவத்தைத் திரும்ப அடையச் செய்யும் போராட்டமே இவ் வுபாதிகள் ரூபமாகப் பரிணமித்திருக்கின்றது. இந்த ஜீவன் தனது நிஜ ஸ்வபாவத்தை எப்பொழுது எக்காரணத்தால் இழந்தான்; எந்த நிலையை இழந்ததற் காகக், காணப்படும் இச் சலனம் யாவும் ஜநித்துள்ளன, என்னும் விஷயத்தை இனி ஆராய்வோம்.

---

"பாராதிபூதநீயல்லை - உன்னிப் பாரிந்தி ரியங்கரண நீயல்லை
யாரா யுணர்வு நீயென்றான்..."

—தாயுமான சுவாமிகள்.

"நாமரூபம் ஆம் இவற்றப்பால்
என்னும் தடையற நின்றுளதான்மா
அதுதான் நீ என்றறியக் கடவை
ஓதுகநீ "ஓம் தத்ஸத் ஓம்" என"

—ஸ்வாமி விவேகானந்தர்.

## இரண்டாம் அத்தியாயம்

# ஜீவன் (ஆத்மா) தன் து நிஜ சுபாவத்தை இழந்ததுண்டா?

ஜீவன் உபாதிகளால் பலவாகக் காணப்படுகின்ற தென் றல்லவா கூறியுள்ளோம். ஒரு வஸ்துவைப் பல வஸ்துப் போன்று தோன்றச் செய்வதற்குக் காரணமா யிருப்பது உபாதி. இவ்வித உபாதிகளின் தன்மையையும், அவைகளுக்கும் ஜீவனுக்கும் இருக்கும் சம்பந்தத்தையும் முதலில் கவனிப்போம். உதாரண மாகப் பஞ்ச கோசங்களாகிய உபாதியை எடுத்துக் கொள்வோம். அன்ன மய, பிராணமய, மனோ மய, விஞ்ஞான மய, ஆனந்த மயகோசங்களே பஞ்சகோசங்க ளெனப்படும். அன்ன மயகோச மென்பது இந்தத் தூல உடல். தூல சரீரங்கள் ஆறு தத்துவமாய், நால் வகைப் பிறப்பாய், மூவகைச் சாதியாய்த் தூல பூதங் களி னின்று உதித்துள்ளன. மாந்தர் இவ்வுடலோடு தம்மை தாதான்மியப் படுத்திக் கொண்டு பிறப் பிறப் பென்னும் சுழிவாய்ப்பட்டுக் கிலேச முறுகின்றனர். பிராண மய கோசமென்பது பிராணவாயுவும், கன் மேந்திரியமும் கூடியது. இக்கோசமே உயிர் தங்குமிட மென்பாரு முளர். உடலை விட்டு ஆவி போவதற்கு, இவை சேட்டை யற்றுப் போவது காரணமென்று நினைப்போரு முண்டு. மனமும் ஞானேந்திரியங்களும் கூடியது மனோ மய கோசமெனப்படும். இது உடல் நழுவிய காலத்து ஏற்படக் கூடிய விகார பீஜ ஸ்தல

மாகும். புத்தியும், ஞானேந்திரியமும் கூடியது விஞ்ஞான மய கோசம். இது மனோ மய கோசத்துடன் இணைபிரியாது இருப்பதாகும். காரண சரீரமே ஆனந்த மய கோச மெனப்படும். இது சுழுத்தி அவஸ்தை நிகழுவதற்குப் புலமாயிருந்து, ஏனைய கோசங்களுக்கு அடிப் பீடமாயும் விளங்குவது. மோக்ஷ நிலையில்தான் இது நாச முறத் தக்கது. இக் கோசங்கள் யாவும் மூலப் பிரகிருதியின் தாமத குணமாகிய விக்ஷேப சத்தியி னின்று பிறந்துள்ளன. இம்மூலப் பிரகிருதியோ வெனில், அகண்ட பரிபூரண சச்சிதானந்த பிரஹ்மத்தி னிடத்து சுத்தியில் (கிளிஞ்சலில்) ரசதம் (வெள்ளி) தோன்றினாற் போலத் தோன்றும் ஒரு சக்தியாகும். (இத் தத்துவங்களின் விரிவுரையைச் சேஷாத்திரி சிவ னார் அருளிச் செய்த நானா ஜீவா வாதக் கட்டளையில் காணலாம்.) கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளி எப்படி மித்தையோ, அப்படியே மூலப் பிரகிருதியின் வாயிலாகத் தோன்றும் பஞ்ச கோசங்களும் மித்தையாம். ஏனைய உபாதிகளின் சொரூபமும் இத் தன்மையதாம். உபாதிகள் யாவும் மித்தை யென்று அறியுமிடத்து, இவைகளினிடம் தோன்றும் சலனமும் மித்தை யென் பதற்கு ஐயமில்லை. சலனம் மித்தையாயின் ஜீவனது போராட்டம் அசம்பாவிதம். போராட்டம் இல்லையா யின், ஜீவன் தனது நிஜ சுபாவத்தை இழந்ததாகாது என் பது ஐயந் திரிபற விளங்கல் வேண்டும். எனவே, ஜீவன் ஒரு பொழுதும் ஒரு நிமித்தத்தாலும் தனது நிஜ

சுபாவத்தை இழக்கவில்லை என்பது புத்திக்குப் புலப்படல் வேண்டும்.

இவ் விஷயத்தை இன்னொரு வகையால் பரிசோதிப்போம். இம் மண்ணுலகிலுள்ள பொருள்களைச் சடம் சித்து என இரண்டு வகைகளாகப் பிரிக்கலாம். அறியப்படு பொருள் யாவும் சட மெனவும், அறிவது எதுவோ, அது சித் தெனவும் உணருதல் வேண்டும். சடப் பொருளைப் பற்றிய ஞானம் எப்படி உண்டாகிறது என்பதை உற்று நோக்குவோம். சித் பொருள்களில் ஒன்றாகிய மனிதனை எடுத்துக் கொண்டால், அவனுடையும் ஞான மெல்லாம் அவனது மனத்தின் மூலமாகத்தான் உண்டாகிறது என்பது யாவருக்கும் தெரிந்த விஷயம். மனம் ஒரு குளத்தை [illegible]றது. ஒரு குளத்தில் ஒரு கல்லை எறிந்த[illegible] அக்குளத்தி[illegible]த்தில் உடனே அலை ரூபமாக ஓர் [illegible]தாககுண்டாகிறது. இந்த அலை கல்லை நோக்கி [illegible]ந்து வருவதைக் காண்கிறோம். இந்த அலை கல்லல்ல; ஆனால், கல்லின் தாக்கால் உண்டாகியது. அதைப்போல வெளி உலகத்திலுள்ள (உதாரணமாக மரமாகத் தோன்றும்) ஒரு பொருளாகிய கல்லானது மனது என்னும் குளத்தில் தாக்கியவுடனே மரம் என்னும் அலை எழுகின்றது. இம் மரம் அப்பொருளாகாது ; பின்னர் அப்பொருளின் தாக்குதலால் உண்டான தோற்றம். எவ்வண்ணம் குளத்துக்கும் கல்லிற்கும் வேறதாகிய அலை தோன்றுகிறதோ, அவ்வண்ணமாகவே மனதுக்கும் வெளி உலகிலுள்ள

பொருளுக்கும் வேறதாகிய மரம் என்பது தோன்று கிறது. எனவே, வெளியிலுள்ள பொருளின் நிஜ தத்துவம் புலப்படுவதில்லை. புலப்படும் யாவும், கால தேசங்களுக் குட்படுகின்றன. புலப்படாததான பொருள், கால தேசங்களுக் கதீதமெனப் பெறப்படுகிறது.

'நான்' என்னும் ஞானம் எப்படி உண்டாகிறது? எவ்வித ஞானத்துக்கும் இரண்டு அம்சங்கள் இன்றி யமையாதன. ஒன்று வெளியி லுள்ளது; மற்றொன்று உள்ளேயுள்ளது. நம்முள்ளிருக்கும் சைதன்யம், மனத் துடன் சம்பந்திக்கும்போது "நான்" என்னும் உணர்ச்சி தோன்றுகிறது. இந்த "நான்" சைதன்யமுமல்ல, மனது மல்ல. மேலும் இந்த 'நான்', கால தேசத்துக்கு உட் பட்டதாகும். சைதன்யம் காலதேசத்துக் குட்படாமை யால், அதன் நிஜ சுபாவம் புலப்படுவதில்லை. இவ்வாறு வெளி உலகிலுள்ள பொருளும், உள் ளுலகி லுள்ள சைதன்யமும் காலதேச நிமித்தங்கட்கு அதீதமானவை. கால தேச நிமித்தங்கட்கு அதீதமானது, அனந்தமாய் அதாவது எல்லை யற்றதாய், விபுவாய் இருத்தல் வேண் டும். அவ்வித அனந்த வஸ்து இரண்டாக இருத்தல் இயையாது. ஆதலின், வெளியிலுள்ள சடப் பொரு ளும், உள்ளிலுள்ள சித்துப் பொருளும் ஏகமே என்பது பெறப்படுகின்றது. இவ்வாற்றானும், சித் வஸ்துவாகிய அந்த அத்விதீய ஜீவனுக்கு ஒப்பாரு மிக்காருமில்லை யென்பது வெளிப்படை. அங்ஙனமாயின், ஜீவன் தனது நிஜ சுபாவத்தை எங்ஙனம் இழந்திருத்தல் கூடும்? ஜீவ

னிடத்துத் தோன்றும் சலன ரூபமான சேதன அசேதனப் பொருள்கள் யாவும் ரச்சுவில் (பழுதையில்) சர்ப்பம் (பாம்பு) போல அசத்தேயாம் என்பதை ஒப்புக்கொள்ள வேண்டியது. ஆகவே, ஜீவன் எப்பொழுதும் எக்காரணத்தாலும் தன் நிஜச்பாவத்தை இழந்ததில்லை.

மற்றும் ஒரு யுக்தியால் இவ்விஷயத்தைப் பரிசோதித்துப் பார்ப்போம்;—சுழுத்தி அனுபவம் யாவருக்கும் உளதன்றோ! அவ் வவஸ்தையில், சங்கற்பவிகற்ப ரூபமான மனது, கிரியை யற்றிருக்கின்றது என்பது எல்லாருடைய அனுபவம். அவ் வவஸ்தையின் கண்ணுள்ள ஒரு புருடனை ஒரு பாம்பு தீண்டச் சென்றால், அதை அப்புருடன் உணராதிருப்பதே இதற்குச் சான்றாகும். அவ் வவஸ்தையில்,உலக ஞானம் கிஞ்சித்தும் அவனிடம் நிகழா திருத்தலை, அப்புருடன் விழித்த பிறகு கண்டறிவதுடன்,அவனைச் சுற்றிலும் அச்சமயம் விழித்திருந்த ஏனைய புருடர்களும், போதிய சான்றளிக்கின்றனர். எனவே, இச் சுழுத்தி நிலை, துவிதபாவனை யற்ற நிலையதாகும்; விவகார மற்றதாகும்; தேக பாவனை இம்மியளவும் நிகழாத நிலையாகும். என்றாலும், இப்புருடன் விழித்த காலத்தில் "நான் நன்றாய்த் தூங்கினேன்" என்று கூறுகிறான். அதாவது, தான் சுழுத்தியிலிருந்த நிலையைக் கவனத்துக்குக் கொண்டு வருவதனால்,இவ்வாறு கூறுகிறான். எது அறியப்பட்டதோ, அதனையேதான் கவனத்துக்குக் கொண்டுவர இயலும். ஆதலின், அந்நிலை

யில், விருத்தி இருந்திருக்க வேண்டு மென்பது அனுமா னிக்கப்படல் வேண்டும். அந்த விருத்திக்கும் சாக்ர, சொப்பன அவஸ்தைகளி லிருக்கும் விருத்திகளுக்கும் வித்தியாசம் உண்டு. பின் கூறிய இரண்டு அவஸ்தைகளி லும் இருக்கும் விருத்திக்கு இரண்டு, அல்லது, அவை களுக்கு மேற்பட்ட பொருள்கள் விஷயங்களாக இருக்க, முற் கூறிய அவஸ்தையில் விடயப் பொருள்கள் இன் மையே விஷயமாகத் திகழ்கின்றது. சாக்ர சொப்பனங் களில் உளதாகும் ஞானம், ஒரு பொருளை மற்றொரு பொருளோடு ஒப்பிட்டுப் பார்த்துத், தரம் பிரிப்பதனுல் விளைவதாகும். சுழுத்தியில் உண்டாகும் ஞானமோ, இவ்வாறு உளதான தன்று என்பது பெறப்படல் வேண்டும். ஆகவே, இம் மூன்று அவஸ்தைகளிலும் நிலை பெயராது இருப்பது சித்து. அதனிடம் தோன் றும் சேதன அசேதனப் பொருள்கள் யாவும் அத னது விவர்த்த மென்பர் மெய்ஞ்ஞானிகள். இந்த சித்தை நன்முக விசாரிக்கில், சின்மயமாம் ஆத்மாவன்றி இலவேயில்லை என்பது அனுபூதிமான்களின் துணிபு.

மேலும், 'கர்ம வசத்தாற் பஞ்சீகிருத பஞ்ச மகா பூதங்களாற் செய்யப்படும் இத்தூல தேகத்தைப் பார்க்கி லும், சுரோத்திராதி பஞ்ச ஞானேந்திரியங்கள் (சூட்சும மாயும், பிரகாசமாயும், வியாபகமாயும், உள்ளாயும் இருத் தலால்) மேலாம்; நிக்கிரகிக்கத் தக்கவைகளான பஞ்ச ஞானேந்திரியங்களைப் பார்க்கிலும், (அவைகளை விஷயங் களிற் பிரேரேபிக்குஞ் சங்கற்ப விகற்பான்மகமான) மகத்

தாகிய மனது மேலாம். மனத்தைப் பார்க்கிலும் அதனைக் காக்கத்தக்க நிச்சயரூபமான புத்தியானது மேலாம். புத்தியைப் பார்க்கிலும் திருசியமான தேகேந்திரிய மனோ புத்திகளைச் சாட்சியா யிருந்தறியும் பரமான்மாவே தொன்மையான பரமாம்' என்று கிருஷ்ண பகவான் பகவத் கீதையில் பகர்ந்திருப்பதை உற்று நோக்கின், ஜீவனது நிஜ சுபாவத்தைப் பாதிக்கவல்ல பொருள் இல்லையென்பது தெற்றெனை விளங்கல் வேண்டும். ஆகவே, ஜீவன் தனது நிஜசுபாவத்தை இழப்பதற்கு ஹேது இல்லாமையால், அதனை இழந்ததே இல்லையென்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கல் வேண்டும்.

“அப்புருவாம் வாரிதியிற் றோன்றி யாங்கே
யடங்கிடு மனேகவித வலையுமந்த
வப்புருவே யாவதலான் மத்தி யத்தி
லன்னியமா யாரேனுங் கண்ட துண்டோ
சிற்பிரம வாரிதியிற் றோன்றி யாங்கே
சிதைகின்ற செகமுதலா மலையு மந்தச்
சிற்பிரம மாவதலான் மத்தி யத்திற்
சிறிதுமய லாகாது சத்தி யந்தான்.”

“மண்ணினிடைக் காண்கின்ற விகார மெல்லா
மருவியவம் மண்ணேயா நீதி போலுந்
தண்ணினிடைக் காண்கின்ற விகார மெல்லாந்
தங்கியவத் தண்ணேயா நீதி போலும்

விண்ணினிடைக் காண்கின்ற விகார மெல்லாம்
விரவியவவ் விண்ணேயா நீதிபோலுந்
திண்ணியசிற் பிரமத்திற் காணு நின்ற
செகசீவ பரங்களெல்லாம் பிரம மேயாம்."

" ஆன்மாவே முக்குணமாம் பகுதி யாகு
மான்மாவே யதன்செய்கை யனைத்து மாகு
மான்மாவே யகங்காரம் புத்தி யாகு
மான்மாவே மனதாகுஞ் சித்தமாகு
மான்மாவே யுயிராகும் பொறிக ளாகு
மான்மாவே யுடலாகும் புலன்க ளாகு
மான்மாவே மற்றுமுள தெவையு மாகு
மான்மாவுக் கயலாயோ ரணுவுமில்லை."

என்று ரிபு கீதையில் மொழிந் திருப்பதை மனனத்தா லும், தியானத்தாலும் ஓர்ந்துணரின், ஜீவனை யன்றி அதாவது அத்விதீய ஆன்மா வன்றி, அயலொன்றும் இல்லை யென்பதும், அயலொன் றில்லாமையால், ஜீவன் தனது நிஜ ஸ்வபாவத்தை இழந்ததில்லை யென்பதும் தோன்றும். ஜக ஜீவாதிகளெல்லாம் மித்தை என்பதும் விவேகி யானோனுக்குப் புலப்படும்.

ஆத்மாவே யாவுமா யிருத்தலின், அவ்வாத்மா சுக மயமாய் இருத்தல் வேண்டும். அப்படியாயின், துக்க அனுபவம் எவ்வாறு நிகழ்ந்து வருகிறது என்னும் கேள் விக்கு, " அவ்வுணர்ச்சி அஞ்ஞானத்தால் நிகழ்ந்து வரு

கின்றது" என்றே ஞான நூல்கள் ஓலமிடுகின்றன. இது,

"போதமென்பதே விளக்கொவ்வு மவித்தைபொய்யிருளாந்
தீதி லாவிளக் கெடுத்திரு டேடவுஞ் சிக்கா
தாத லாலறி வாய்நின்ற விடத்தறி யாமை
ஏது மில்லை யென் றெம்பிரான் சுருதியே யியம்பும்"

என்று தவ ராஜ சிங்கமாகிய தாயுமான சுவாமிகள் அருளிய திருப் பாடலினின்று ஐயந் திரிபற வெளியாகின்றது. இருள் அதிசொற்ப ஒளியேயாகும்; ஒளிக்கு மாறானதன்று. அங்ஙனமன்றாயின் நள்ளிருளில் ஆந்தை முதலிய ஜீவஜெந்துக்கள் பொருள்களைக் காணும் சக்தி யுடையவைக ளாகா. அன்றியும், அளவுக்கு மிஞ்சின ஒளி இருளாகத் திகழ்வதால், இருள் என்பது ஒளிக்கு அன்னிய மாகாது. அவ்வண்ணமே, அஞ்ஞான மென்பது ஞானத்துக்கு விரோதியும் அன்னியமுமாகாது. அதிசொற்ப ஞானமே அஞ்ஞான மெனத் தத்துவ தரிசிகளாற் கருதப்படுகிறது.

இந்த அஞ்ஞானத்தைப் பூரண ஒளிப் பிழம்பாகத் திகழச் செய்வது எப்படி என்பதை இனி விசாரித்து விளக்குவோம்.

---

## மூன்றும் அத்தியாயம்

# ஞான அஞ்ஞான ஸ்வரூபம்

தினசரி வாழ்வில் காணப்படும் பொருள்களைப் பற்றிப் பிறழானதும், திருத்த மற்றதுமான எண்ணமும் நடக்கையு முடைய ஒருவனை, அறிவிலி என்றும், ஞான மில்லாதவன் என்றும் கூறுவது உலக இயல்பு. கிறிஸ்த வர்கள் தங்கள் மதத்தைச் சாராத ஏனைய மதஸ்தர்களை "அஞ்ஞானிகள்" என்றும் கூறுவர். ஜன சமூகத்தில் பரவி வரும் எண்ணங்களுக்கு மாறாக ஒருவன் பேசி னும் நடக்கினும், அவன் அஞ்ஞானி என்று உலகோ ரால் மதிக்கப்படுவன். அவன், தனது அத்துமீறி ஜன சமூகத்துக்குச் சம்மதமற்ற காரியத்தைச் செய்யின் அவன் ஜன சமூகத்தினின்றும் நீக்கப்படத் தக்க அஞ் ஞானி யெனத் தீர்மானிக்கப்படுவன். இத் தகைய அஞ் ஞானத்தையன்று, இக் கட்டுரை பேசுவது. தோன்றி நின்றழியும் தேகம், உலகம் முதலியவைகளை நித்திய மென்று கருதுவதையும், பிறப்பிறப்பில்லாத தன் னைப் பிறப்பு இறப்புடையவனாகப் புருடன் ஸ்மரிப்பதையும், அஞ்ஞான மென்பர் பெரியோர். இந்த அஞ்ஞானத்துக்குப் புருஷன் அன்றி வேறொன்றும் ஆசிரய மாகாதாகையாலும், அப்புருஷனது நிஜ சொரு பம் பரப்பிரஹ்மமே யாகையாலும், அந்தப் பரப்பிரஹ் மம் ஞானரூப மாகையாலும், அஞ்ஞான மென்று சொல்வதெல்லாம், ஞானத்தை ஆசிரயமாக உடைத்தா யிருத்தல்வேண்டும்; அதற்கு வேறாகாது. எனவே, அஞ்

ஞானத்தை மங்கலான ஞானம் என்றே மதித்தல் வேண்டும். மங்கலான ஞானத்தை, அதாவது, அஞ் ஞானத்தைப் பூரண கலையுடன் பிறங்கச் செய்வது எப்படி ?

துக்க ரூபமாக இவ் வுலகம் ஜீவ ராசிகளுக்குத் தோன்றுகிறது. அங்ஙன மன்றாயின், அவர்களது போராட்ட ரூபமான வாழ்க்கை எற்றிற்கு ? துக்கத்தை நீக்குவதற்கல்லவா ! ஆனால் ஜீவன்முக்தர்கள் இவ்வுல கத்தைப் பிரஹ்மமயமாகப் பார்ப்பதால், சுக ரூபமாக இவ்வுலகம் அவர்களுக்குத் தோற்றல் வேண்டும். இவ் விரண்டு வித அனுபவங்களுக்குக் காரணம், இவ்விரு திறத்தாரும் கொண்டுள்ள பாவனைகளின் (கற்பனை களின்) வேறுபாடேயாம்.

'யாதொரு பொருளை யெல்லா
வுயிர்களு மிருள்போற் காணு
வோதரு ஞானியத்தை யுளங்கையிற்
கனிபோற் காணும்
யாதொரு பொருளை யெல்லா
வுயிர்களு மென்றுங்காணுங்
காதலின் ஞானியத்தைக்
கண்ணினுற் றெரியக்காணுன்'

என்று பகவான் பகவத் கீதையில் கூறியுள்ளது இங்கு கவனிக்கற் பாலதாம்.

சச்சிதானந்த வஸ்துவுக்கு நாம ரூபப்போர்வையிட்டு, அந்நாம ரூபங்களிலேயே அழுந்தி, அவைகளை நித்திய மென்று வெகு காலம் நினைத்து வந்த பிராந்தியே, ஜீவர்களது துக்கத்துக்கு ஹேதுவாகும். நாம ரூபத்தைக் களைந்து, வஸ்து தரிசனம் பெறின், பண்டை மேவிய துக்கமெல்லாம் சூரியன் முன் பனிபோல அறும். நாமரூபங்களிடத்து ஜீவன் அத்யந்த பிரியத்தை எப்பொழுது, ஏன், கொள்ளலாயினுன் என்னும் கேள்விகள் பயனற்றவை யென்றும், அந்நாம ரூபங்களின் கவர்ச்சிக் குட்படாது, அவைகளைக் களைந்து, வஸ்து தரிசனம் எய்துவதற்கு ஏற்ற மார்க்கம் உளது என்றும், அம்மார்க்கத்தைக் கடைப்பிடித்தலே முமுக்ஷுவின் இலக்கணமென்றும், மூதறிஞர் மிக்க கருணையுடன் புகல்கின்றனர்.

முதலாவது, நாம ரூபங்கள் பிரஹ்மத்துக் கயலாயுள்ளன என்னும் பிராந்தி ஞானத்தைத் நீக்கி, அவை பிரஹ்மத்துக் கன்னியமாகா வென்னும் பாவனையைக் கைக்கொள்ளல் வேண்டும். கிளிஞ்சலிற் றோன்றும் வெள்ளி, எவ்வண்ணம் அதற்கு அதிஷ்டானமான கிளிஞ்சலுக் கன்னியமாகாதோ, சமுத்திரத்தில் தோன்றும் அலையாதிகள், எங்ஙனம் அச்சமுத்திர சலத்திற்கு வேறுகாவோ, அங்ஙனமே "புகலரும் பரப் பிரஹ்மமாம் கடல் தனில்" தோன்றும் ஜகஜ்ஜீவாதி, அப்பரப்பிரஹ்மத்துக்கு வேறுகா என்பதை சாக்ஷாத்கரித்து, "சுக சொரூபமே

யனைத்துமென்று" உணர்ந்து, துவிதபாவனையை ஒழித்தல் வேண்டும்.

நாம ரூபங்களால் விளையுஞ் சுக துக்கங்களுக்குக் காரணம், நாமரூபங்களிடத்து ஜீவனுக்குள்ள அகங்கார மமகார புத்தி என்பதையும் கவனித்தல்வேண்டும். ஒரு புருடனுக்குத் தனது குமாரன் மரித்தான் என்னும் சமாசாரம் துக்கத்தைத் தருவதுபோல, அன்னியனுடைய புத்திரன் மரித்தான் என்னும் சமாசாரம் ஏன் அவ்வித துக்கத்தை விளைவிப்பதில்லை? தனது புத்திரனிடத்துத் தனக்கிருந்த அபிமானமே, இவ்வித்தியாசத்துக்குக் காரணமென்பது புலப்படுகின்றது. தனது அந்தஸ்து, அதிகாரம், செல்வம் முதலியவைகளை யறியாமல், ஒரு புருடன் தன்னை சன்மானிக்கா தொழிந்தானாயின், அப்பொழுது தன்னிட மெழும் கோபாதிகட்குக் காரண மென்னை? "நான்" என்கிற அகங்காரமல்லவா? ஆதலின், அகங்கார மமகாரங்களை ஒரு புருடன் ஒழித்து விடுவானாயின், நாமரூபங்கள் அவனைத் தங்கள் வயப்படுத்த அசக்தி யுடையவைகளாகும். இவ்வகங்கார மமகாரங்களை எவ்வாறு விடுவது? தனக்கு வேண்டிய சுகம் பகிர்முகப் பொருள்களில், நாமரூபப் பொருள்களில் வைகுகின்றது என்னும் எண்ணத்தை அறவே விடல்வேண்டும். ஓர் ஆட்டிடையன் தனது ஆட்டைத் தோள்மீது வைத்துக் கொண்டே அதனை அடைய வெளியே தேடித் திரிந்தலைவது போலும், ஒரு புருடன் ஆபரணத்தைக் கழுத்தி லணிந்திருந்தும், அதனை

இழந்து விட்டதாக எண்ணி வெளியில் தேடி அலைவது போலும், மக்கள் நாடும் சுகம் அவர்களுக் குள்ளே பொதிந்து கிடக்கும், அதனை வெளியி லுள்ள பொருள் களில் இருப்பதாக எண்ணிப் போராடுகின்றார்கள். இத ளுல் துக்க வயப்படுகிறார்கள். ஆதலால், சுகத்துக்காக நாமரூபப் பொருள்களை நாடாது, சத்திய ஞானனந்த மென்னும் பாவனையை மக்கள் ஏற்பரேல், அஞ்ஞானம் பூரண ஞானமாகத் தம்முள்ளே திரிபடைவதைக் கண்டு களிப்பார்கள்.

மேலும், புறம்பே மக்கள் நாடிச் செல்லும் பொருள் களின் இலக்ஷணம் தான் என்னை ? அப் பொருள்களின் நிச நிச சொரூபந்தான் என்னை ? வெளிப் பொருள்களின் நிச சொரூபம், சைதன்ய சொரூபத்துக்கு வேறாக இருத்தல் ஒண்ணு தென்பது முன்னர்த் தெளிவாகக் காட்டப்பட் டது. ஐம்புலன்களால் உணர்த்தப்பட்ட சப்த பரிச ரூப ரச கந்தத் தொகுதியைத்தான், பாமர ஜனங்கள் பொருளாக எண்ணி மோசம் போகின்றனர் என்றும் முன்னர் உரைக்கப்பட்டது. பொருள்கள் நமது ஞானத்தில் கற்பிதமாய்த் தோன்றுவன வாகும். அங் ஙன மன்றாயின், ஒரு பொருள் இன்றைக்கு ஒருவித உணர்ச்சியையும், மற்றொரு காலத்தில் மாருன, அல் லது, சற்று வேறு பாடான உணர்ச்சியையும் விளைவித்தல் கூடாது. இன்று நட்பாளனுக இருக்கும் மனிதன் மற் றொரு காலத்தில் விரோதியாக மதிக்கப்படுகிருன். இனிப்பான சர்க்கரை சுரம் வாய்ப் பட்டவனது நாவுக்

குக் கைப்பாக விளங்குகிறது. ஆதலின், சுகாசுகம் அத்விதீயமாகப் பொருளினிடம் எஞ்ஞான்றுமில்லை. பின்னர் மக்களது ஞானத்தில் கற்பிதமாய்த் தோன்று கின்றன என்பது பெறப்படுகிறது. மேலும், ஐந்து கூறுபாட்டினை யுடையன வாகிய சுரோத்திராதி இந்திரியங்களும், சப்தாதி விஷயங்களும், பரஸ்பரம் விஷய விஷயீ பாவ சம்பந்தமாய்த், தத்தம்மோடு சம்பந்தித்த அந்தக் கரணத்திற்குக் கொடுக்க, சீதோஷ்ண சுக துக்காதிகள் வந்து பொருந்துகின்றன. அந்தக்கரணத்திற் கெதிரே ஐம்புலன்களால் கொண்டுபோய் வைக்கப் பட்ட உணர்ச்சிகளின் தொகுதியே பொருளெனப் படுகிறது. சப்தாதி தொகுதிகள் பற்பலவாம். ஒவ்வொரு தொகுதியும், தனித்தனி நாம ரூபத்தால் குறிக்கப்படுகிறது. ஆதலின், சப்தாதி தொகுதிகளே பொருள்களாக மதிக்கப்படுகின்றனவே யொழிய, ஐம்புலன்கள் போய் சையோகிக்கும் வஸ்துவின் நிஜ ஸ்வரூபம், ஜீவனுக்குக் கோசரமாவ தில்லை. இப்போது ஜீவனுக் கிருக்கும் ஐம்புலன்களுடன் ஆறுவது புலன் புதிதாகச் சேர்க்கப்படுமாயின், பொருள்களைப் பற்றிய ஞானம் வேறுபடு மென்பது கூறுமலே விளங்கும். ஆதலின், பொருள்களைப் பற்றி நமக்குள்ள ஞானம் கற்பிதமேயாமென்பது விளங்கல் வேண்டும். எனவே, உலகப் பொருள்கள் ஜீவனது கற்பித் மாகலின், அவைகள் அவனுக்கு வேறுகா வென்பதை ஐயந் திரிபற உணர்தல் வேண்டும். ஜீவன் அறிவு ஸ்வரூபியாகலின், உலகப்

பொருள்களும் அறிவுக் கன்னிய மாகாவென்பது பெறப்படல் வேண்டும். ஆதலின், யாவும் அறிவே என்னும் அப்பியாசத்தைப் புருடன் மேற்கொண்டு, அதனை நிரந்தரம் கையாண்டு வந்தால், அஞ்ஞானம் ஞான மயமாய்த் திகழும். அறிவே ஆனந்தம்; அறிவே ஞானம்.

பந்தத் துயரற்ற தன்னைச் சம்சாரியாகவும் துக்கானுபவியாகவும் எவ்வண்ணமோ கருதத் தலைப்பட்டுவிட்ட புருடனுக்குப் பந்தமும், துயரமும் தன்னை விட்டொழிய வேண்டுமாயின், தான் சுக சொரூபி, சச்சிதானந்த சொரூபி, என்னும் பாவனையை மனத்திற் கொண்டு வெகுகாலம் பழகவேண்டும். அப்பொழுது அஞ்ஞானம் மங்கலான ஞானமெனப் புலப்படுமே யன்றி, ஞானத்துக்கு விரோதி அன்றென்பது அறிவிலுதயமாகும்.

ஜீவன் சம்சார சாகரத்தில் அகப்பட்டு, 84 இலக்ஷ யோனிகளும் பிழைத்தேறி, "எறியுங் கடலின் நுகத் துளையில் ஆமைகழுத்துப் புகுவதுபோல்" ஆன்மா அனுன்மாக்களைப் பகுத்தறியு மியல்புடைய மானிடப் பிறவியை எய்தி யிருத்தலை உன்னி உன்னி, போதம் என்னும் விளக்கைச் சுடர் விட்டெரியச் செய்து அவித்தையாகிய பொய் யிருளைத் தலைகாட்டாமற் செய்ய வேண்டும். "பிரஞ்ஞானம் பிரஹ்மம்" என்பது முதலிய மகாவாக்கியங்களின் உதவியால் பரஹ்மான்ம ஐக்கியத்தை ஐயந் திரிபற உணர்ந்து, தான் தேகமல்ல, ஐம்புலன்களல்ல, கரணமல்ல, அவித்யா பிரதிபிம்பனும்

இறப்பும் பிறப்பும் பொருந்திய ஜீவனு மல்ல, புத்தி யல்ல, பின்னர் கால தேச காரண காரிய பரிச்சேத ரகித பிரஹ்மமே தான் என்னும் பாவனையை வகித்து, அந்தப் பாவனையில் நெடுங் காலம் பழகல் வேண்டும். அப் பொழுதுதான் மங்கலான ஞானம் பூரண ஞானமாய்ப் பிரகாசிக்கும்.

தேகமே நான் என்னும் நினைவானது, மோக்ஷ சாதக னுக்கு சகல இடையூறுகளையும் உண்டாக்கியுள்ளது. அந் நினைவே சம்சாரத்துக்கு வித்து மாகும். அதுவே "திர ளுற்ற பீதி யெலாஞ் செய்வ தாகும்." தேகம் அகம் என்று அறியும் அறிவே அஞ்ஞானமாகும். இவ் வறிவே புத்தியை ஆத்மாவாக அத்தியாசத்தால் நிச்ச யித்திருக்கிறது. நினைவு எதுவோ அதுவே ஜீவ னுகும்; ஈசனுமாகும்; மற்ற, யாவுமாகும். சங்கற்ப நினைவுகளுக்கு உண்மையில் பேதமில்லை. சங்கற்பமே காம மாகும், மோக மாகும்; சகல துன்பமு மாகும். இச்சங்கற்பம் எங்கெங்கே தோற்றுமோ, அங்கங்கே ஜகஜீவ பரங்கள் தோன்றுநிற்கும். ஆதலின் சங்கற்ப ரகிதமாய் நிற் றல் வேண்டும். இது வெகு கால அப்பியாசத்தால் சித்திக்கும். சங்கற்பம் எழுவதற்குக் காரணம் யாது? தன்னிடத்தில் ஏதோ குறைவு உளதாக ஜீவன் எண்ணிப் பிரமித்தலே சங்கற்பத்துக்கு வித்தாகும். அந்தப் பிரமையும், அவ்யக்தமாகிய அவித்தை என்னும் பூமியினி டத்து அங்குரித்துள்ளது. ஆகையால், அவித்தை என் னும் பூமியைச் சூரணம் செய்ய வேண்டும். இது "நான்

தேகமல்ல; பின்னர், நான் பிரஹ்ம ஸ்வரூபி, நான் பூரண புராணன், நான் குறைவற்ற நிறைவுள்ளவன், நான் சுயஞ் சோதி" என்னும் இத்தகைய பாவனையில் விடாது பழகுவதினாலேயேதான் சாத்தியமாகும். அப்போது அஞ்ஞானம் பூரண கலையுடைய ஞானமாக விளங்கும்.

கிரியையில் ஈடுபடாத உயிர் ராசி கிடையாது. கிரியையில் ஜீவனைப் பந்தித் திருப்பது சத்வம், ரஜஸ், தமஸ் என்னும் முக்குணங்களாம். பிரமாதத்தாலும், ஆலசியத்தாலும், நித்திரையாலும், ஜீவன் தாமத குண வயத்தனாய், சுகாசுகம் இன்னவை யென்று ஓராதவனாய், அந்தகாரத்தில் அழுந்திக் கிடப்பான். லௌகீக வைதீக கர்மங்களோடு ஜீவனைப் பிணைப்பது ரஜோ குணமாகும். இதன் வயத்தனாய புருடன் விடாச் சஞ்சலத் தன்மை யடைந்து, விஷயங்களை நுகரும் முயற்சியிலேயே ஈடுபட்டிருப்பான். சஞ்சல மென்னும் அலை ஓய்ந்த நிலையே சாத்வீககுண ஆரம்பம் எனப்படும். ஆகலின், தாமத குணத்தைத் தகைந்து, ராஜத குணத்தை அதிகரிக்கச் செயதாலன்றி, விஷய ஆசையில் விரக்தி தோன்றாது. ரஜோகுணப் பிரவிர்த்தியால் நாளடைவில் விஷயங்களிலுள்ள தோஷம் தோன்றும். அதன் பின்னரே சத்வம் மேலாடத் தொடங்கும். சத்வ குணமும் ஜீவனைப் பந்திக்குந் தன்மை யுடையதே யாம். ஆனால், இதுகாறும் இவனைப் பந்தித்து நின்ற கட்டுகளைத் தளரும்படி செய்யவல்ல சக்தி மாத்திரம்

சத்வ குணத்துக்கு உளதே யன்றி, அக்கட்டை யறுத்துத் தள்ளும் சக்தி அதற்குக் கிடையாது. ஞானிகளின் சாங்கத்யத்திலும், அவர்களுக்குச் செய்யும் பணிவிடைகளிலும், சித்த சஞ்சல மற்றிருக்கைக்கு ஹேதுவான அனுஷ்டான பரனாய் இருத்தலினாலும், அக்கட்டற்று ஆத்ம தரிசனம் லபிக்கும். அத்தறுவாயில் சாத்வீக குணமும், நழுவாமல் நழுவி நிற்கும். அதுவே ஜீவன் கவலை எய்தாக் காலமாகும். அப்போது அஞ்ஞானமாகிய பொய் யிருள் நீங்கி ஞான சூரியன் சுடர் விட்டுத் திகழும்.

---

" எப்பொருளுக்குந் தோற்றமும் நிலையு
மிறுதியுந் தனக்கணே யாகி
யொப்பிட வொன்று மின்றியே யென்றுமுளதா
யுரை யுணர் விறந்த
வப்பொருணேரே யறிந்த போதெல்லாம்
பொருள்களு மறிந்த தாமந்த
மெய்ப்பொருடானே யெப்பொருள்களுமாய்
விளங்கலால் வேறிலாமையினால் "—பிரமகீதை.

---

## நான்காம் அத்தியாயம்

# அனுஷ்டான முறை

நித்திய மல்லாதவைகளை நித்தியமாக எண்ணி ஓடும் மனத்தினேடு, புருடன் தன்னை ஒருமைப் படுத்திக்கொண்டு அடைந்து வரும் அல்லல்களுக்கு அளவில்லை. இம்மனது, விஷயானுபவத்தால் மிகத் தடிப்பேறி, விஷய ரூபமாக, இவ்வுலக வாழ்க்கையில் விளங்குகிறது; விஷயானுபவங்களால் அழுக்கேறி ஆத்மாவைத் தரிசிக்க வொட்டாது ஜீவனைத் துன்புறுத்துகிறது. இம்மனதே சகங்கள் யாவும், இதுவே பகை, இதுவே சம்சார மரணமாகும்; இதுவே கால முதலெல்லையும். ஆதலின், இம்மனத்தை விஷயங்களின்பின் செல்ல வொட்டாது அடக்கவேண்டும். இது வைராக்கியமும் உபாசனையுமில்லாமல் சாத்தியமாகாது. விஷயங்களிடத்து அருவருப்புக் கொண்டு அவைகளைக் கக்கின சோறுபோல மதித்தலும், ஐம்புலன்களைப் பொறிகள் வழிச் செல்லவிடாது அடக்கலும் வைராக்கியமெனப் படும். ஐம்புலன்களை வெளிமுகத்திற் செல்லவிடாமல் அடக்குதல் மாத்திரம் போதாது. இவைகளின் இயல்பையும், போக்கையும், நன்குணரும் விவேக பலனும் இருக்கவேண்டும். அப்போதுதான் விட்ட பொருள்களுக்காக, மனது மறுபடியும் அவாவிச் செல்லாது. ஆதலின், விவேகத்தோடு கூடிய வைராக்கியமே உத்தம

மானது. மனதை ஐம்புலன்களோடு புணராமற்செய்து, அதை உண்முகப்படுத்த வேண்டும். இது உபாசனையால் இயலும்; ஏனெனில், சித்த சுத்தியில்லாமல், மனத்தை உண்முகப்படுத்த இயலாது. அந்தச் சித்த சுத்தி உபாசனையாற் கைகூடும். இந்த உபாசனை மந்திர உபாசனை, மூர்த்தி உபாசனை என இருவகைத்து. இந்த உபாசனா மார்க்கத்தை, ஸ்வ ஸ்வரூப உணர்ச்சி யுள்ள குருவினிடம் உபதேச ரூபமாகக் கற்றுணர வேண்டும்.

இவ் விருவகை உபாசனைகளுக்கும், ஜபம் அத்தியாவசியம். ஆசாரியன் உபதேசித்த மந்திரத்தைத், தினமும் காலை மாலைகளில், சிலகாலம் கிரமமாக சிரத்தா பக்தியுடன் ஜபிக்க வேண்டும். காலை மாலைகளிலுந் தவிர, மற்ற அநுகூல நேரங்களிலும் ஜபம் செய்யலாம். ஸ்நான பானாதிகள் செய்த பின்னரே ஜபம் செய்ய வேண்டு மென்னும் நியமமும் அவசியமில்லை. நினைத்த போதெல்லாமும், சுத்தமுள்ள இடம் அசுத்தமான இடம் என்று பாராமலும், ஜபம் செய்யலாம். ஜபமாலையைக் கையிற்கொண்டு ஜபம் செய்தல் அதிக அனுகூலமாகும். ஜபம் செய்யும்போது மனது ஒரு வழி நில்லாது ஓடக்கூடும். இதனால் ஜப அனுஷ்டானத்தை விட்டு விடலாகாது. மன அலைச்சல் நாளடைவில்தான் ஓயும். புலன்பொறிகளின் வழியாகச் சென்றுகொண்டிருந்த மனத்தின் வேகம் குறைந்து வருவதைச் சாதகன் விரை

வில் காண்பான். சிரத்தா பக்தியுடன் மாத்திரம், சில காலம் சாதகன் ஜபம் செய்து வருவானாயின், தெய்வீகக் காட்சிகளும் நல்ல கனவுகளும் தோன்றும். இவை சாதகனை அனுஷ்டானத்தில் நிலையூன்றச் செய்யும்.

சித்த சுத்தியின் வாயிலாக விஷயங்களிடத்து மனதுக்கிருந்த பற்றுதல் ஒழியும்; பிறகு விஷய வாசனைகள் எஞ்சிநிற்கும்; அவைகளையும் தொலைக்க வேண்டும். இது மிகக் கடினம். இவ்வாசனைகள் தோன்றும்போதெல்லாம் அவைகளுக்கு ஆதாரம், முன்பனுபவித்த விஷயங்கள் என்பதைக் கவனத்திற்குக் கொண்டுவந்து, அவைகளிடத்து துவேஷ புத்தியைக்கொண்டு,விஷய வாசனைகள் எழவொட்டாமல் அவைகளை அடக்க முயலுதல் வேண்டும். இவ்வண்ணம் அப்பியாசம் செய்யச் செய்ய வாசனைகள் தோன்றாமல் மரித்துப்போம். பிறகு மனதை வெளிமுகப் படுத்தக் கூடிய விருத்திகள் பல தோன்றும். இவையும் ஒருவகை வாசனைகளாதலால், குறைவற்ற பூரண ஸ்வரூப பிரஹ்மத்தினிடத்து, விருத்தி எழுதல் அசம்பாவித மென்று சங்கற்பித்து, அச்சங்கற்ப வலிவால் இந்த விருத்திகளையும் நிராகரிக்க வேண்டும். மனது இப்போது சங்கற்பம் உதிக்குமிடத்தை உற்று நோக்கும் திறனை அடையும். பிறகு அது சங்கற்ப மற்றிருக்க முயலும். சங்கற்ப மெழுவது நின்ற பின்னர்த்தான்

ஆத்ம தரிசனத்துக் கநுகூல அப்பியாசந்தலையெடுக்கும். இவ் வப்பியாசம் முதிர முதிர, மனது ஆன்மாவோடு பிரி வற்றிருக்குந் தன்மையை எய்துகிறது. இதனையே ஆன்மாகார விருத்தி என்றும் அகண்டாகார விருத்தி என்றும் அனுபூதிமான்கள் புகல்கின்றனர். இவ்விருத்தியில் நெடுநாள் பழகத் தான்தானாக இருக்கும் நிலையை சாதகன் அடைவான்.

"தானான தன்மயமே யல்லா லொன்றைத்
தலையெடுக்க வொட்டாது தலைப்பட் டாங்கே
போனாலுங் கர்ப்பூர தீபம் போலப்
போயொளிப்ப தல்லாது புலம்வே றின்றாம்
ஞானாகா ரத்தினொடு ஞேய மற்ற
ஞாதுருவு நழுவாம னழுவி நிற்கும்
ஆனாலு மிதன்பெருமை யெவர்க்கார் சொல்வா
ரதுவானா லதுவாவ ரதுவே சொல்லும்"

என்று பரிபூரணானந்தமே உருக்கொண்ட தாயுமான சுவாமிகளால் வர்ணிக்கப்பட்ட ஞானாநந்த அனுபவ வாரிதியில், நீரிற் கலந்த உப்புப் போலும் க்ஷீர ஜலம் போலும், பரப்பிரஹ்மத்திற் கலந்து, இரண்டற்றுக், கேவல அறிவுருவாய் சாதகன் பொலிந்து கிடப்பன். அஞ்ஞான தசையில் தன்னை உபாதி சகிதனாகவும்,

பிறப் பிறப்புடையவனாகவும், பிரமை கொண்டிருந்த ஜீவன்

" மனமுதலாம் வியட்டியா திகளுமின்றி
மாயைமுதற் சமட்டியா திகளுமின்றி,
நனவுமுத லாவா மவத்தையின்றி
நாடியிடு நாமமுரு வெவையுமின்றி,
அநவரத மன்னியமோ ரிறையுமின்றி
அகம்பிரம்ம நிச்சயமு மறவுமின்றிக்,
கனவறிவாம் பரப்பிரம்ம மாத்ரமாகிக்
களங்கமற..........................'

நிற்பன்.

அஞ்ஞான தசையில் அநுபவித்த விஷய இன்பமு மிழந்து, " நானற்ற போதத்தில் " நினைவற்று, ஓர் உணர்வுமின்றிய நிலையால் பயன் யாதுகொல்? என்று சாதகன் மனதில் சங்கை எழுமாயின்

" குளமுத லியவற்றே குளிமுத லியதுய்ப்பா
னளவறு புனல்பெற்று லவைகொள லருமைத்தோ
வளமறு கருமத்தால் வருசிறு சுவைவற்று
வுளமகிழ் பிரமத்தே யுளகொள லெளிமைத்தால் "

(இதன் பொருள் :—"(சொற்ப ஜலமுள்ள) வாவி, கூப, தடாகாதிகளிலே ஸ்நாநசமனபாநாதி ரூப பிரயோஜனங்களை யநுபவிப்பவன், சர்வதிக்குகளிலும் நிறைந்திருக்கிற ஜலத்தை

யுடைய மகாதடாகத்தை யடைந்தால் (அச்சொற்ப ஜல முள்ள வாவி முதலியவற்றிற் பெருகிற்கும்) அவ்வளவு பிர யோஜனங்களையும் பெறுதல் அருமையோ? (அதுபோல) வேதோக்தமான காமிய கர்மங்களால் உளவாகா நிற்கும் பிரம லோக பரியந்தமுள்ள விஷய ஜன்னியமான ஆனந்தங்கள் (எவ்வளவோ அவ்வளவும்) வாடாமல் (சகல பிராணிகளின்) உள்ளமும் (தனதானந்த லேசத்தால்) சந்தோஷியா நிற்கின்ற பிரம்மானந்தத்தின் கண்ணே உள்ளனவாகப் (பிரம்ம நிஷ் டன்) பெறுதல் (அருமையன்று) எளிமையே").

என்று கீதாசாரியர் கிருபையுடன் கூறியதை மனத்திற் கொண்டு அச்சங்கையை நீக்கிச் சோர்வுக் கிடங்கொடா மல், ஞானதீரனாய் ஞானசூரியனாய் சஞ்சரித்தல் வேண்டும்.

வேதாந்த விசாரத்தாலும், குருபக்தியாலும், பொன்னில மாதராசையை விடுதலாலும், பரப்பிரஹ்ம தியானத்தாலும் முத்தியளிக்கும் ஞானமுண்டாய் மனது உபசாந்தி யடையுமேயன்றி, குதர்க்கத்தாலும், வெறும் சாத்திர ஞானத்தாலும், மற்றுமெவைகளாலும் மனது சாந்திதனை மேவாது என்பதை நாம் என்றும் கவனத் தில் வைத்து, அகம் பிரஹ்ம பாவனையில் நிரந்தரம் நின்று பிரஹ்ம மாத்திரமாவோமாக.

" காலமொடு தேசவர்த்த மான மாதி
கலந்துநின்ற நிலைவாழி கருணை வாழி
மாலறவுஞ் சைவமுதன் மதங்க ளாகி
மதாதீத மானவருண் மரபு வாழி
சாலமிகு மெளியேனிவ் வழக்குப் பேசத்
தயவுவைத்து வளர்த்தவருட் டன்மை வாழி
ஆலடியிற் பரமகுரு வாழி வாழி
யகண்டிதா காரவரு ளடியார் வாழி "

ஓம் தத் ஸத்





குறிப்பு :—இந்தப் புத்தகம் சென்னை மயிலாப்பூர், குயப்பேட்டை [illegible] தம்பிரகவுளி 2-வது தெரு, 27-வது இலக்கமுள்ள [illegible] வசிக்கும் பூ. மாணிக்கசாமி முதலியாரிடமும் அப்பர்சுவாமி கோயில் தெரு, 68-வது எண்ணுள்ள வீட்டிலிருக்கும் [illegible] முனிசாமி நாயகரிடமும் கிடைக்கும். இதை வாங்குகிறவர்களுக்கு, பக்தி புகட்டும் " பாரிஜாதம் ", " குரு பக்தி " என்னும் நூல்கள் இனாமாகக் கொடுக்கப்படும்.

